## முதற்பாகம்

## நுபுவ்வத்துக் காண்டம்

## நபிப்பட்டம் பெற்ற படலம்

### எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

1241. சோதியா யெவைக்கு முள்ளுறைப் பொருளாய்த்
தோற்றமு மாற்றமுந் தோன்றா
வாதிதன் பருமான் கொண்டினி தோங்கி
யமரிழிந் தமரருக் கரசன்
மேதினி புகுந்து முகம்மது தமக்கு
விளங்கிய நபியெனும் பட்டங்
கோதறக் கொடுப்பத் தீன்பயிர் விளைத்த
கூறெலாம் விரித்தெடுத் துரைப்பாம்.

1

பிரகாசமாகவும் யாவற்றிற்கும் உள்ளே தங்கா நின்ற பொருளாகவும் பிறப்பும் இறப்பும் உண்டாகாத ஆதியான அல்லாகு சுபுகானகுவத்த ஆலாவின் கட்டளை கொண்டு தேவர்களாகிய மலாயிக்கத்துமார்களுக்கு அதிபரான ஜிபுறீல் அலைகிஸ்ஸலா மவர்கள் இனிதாக வோங்கி தேவலோகத்தை விட்டும் இறங்கி இப்பூலோகத்தின்கண் நுழைந்து ஹபீபு றப்பில் ஆலமீன் நபிமுகம்மது முஸ்தபாறசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களுக்குக் குற்றமற விளங்கிய நபியென்று சொல்லும் பட்டமருள, அவர்கள் இப்பூலோகத்தின்கண் தீனென்னும் பயிரை விளையச் செய்த காரணங்களெல்லாவற்றையும் விரைவாய் எடுத்து யாம் சொல்லுவாம்.

1

1242. புள்ளிவண் டருட்ட முண்டிசை பயிலும்
பொழிறிதழ் மக்கமா புரத்திற்
றெள்ளிய குறைசிக் குலத்தினி லுதித்த
செம்மலுக் குறைந்தபே ராண்டு
விள்ளருங் கணக்கா றாறிரண் டதின்மேல்
மேலவன் றிருவுளப் படியால்
வெள்ளிடை யதனிற் சிறிதொளி திரண்டு
விழித்திடும் விழிக்கெதிர் தோன்றும்.

2

புள்ளிகளை யுடைய தேனீக்கள் மதுவை யருந்தி இராகம் பாடும் சோலைகள் பிரகாசிக்கின்ற திருமக்கமா நகரத்தின்கண் தெளிவான குறைஷிக் கூட்டத்தி லுதயமாகிய செம்மலான கீர்த்தி தங்கிய நாயகம் நபிமுகம்மது முஸ்தபாறசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களுக்குச் சொல்லுதற்கரிய வயசின் கணக்கானது முப்பத்தெட்டின்மேல் மேலவனான ஜல்லஜலாலகுவத்த ஆலாவின் திவ்விய சித்தத்தின் வண்ணம் வெளியில் சிறிது பிரகாசமானது திரட்சியுற்று பார்த்திடும் பார்வைகளுக்கு எதிராய்த் தோற்றா நிற்கும்.

1243. தெரிந்திடு மொளியைத் தம்மிரு விழியாற்
றெரிதர நோக்குவர் காணா
திருந்திடும் பின்னுந் தோற்றிடு மிதனை
யெவரொடும் விடுத்தெடுத் துரையார்
பொருந்துளக் களிப்பு மச்சமும் பிறப்பப்
புந்தியிற் றேர்குவர் பொருவாக்
கருந்தலைக் கவைநா வரவுட றடிந்த
கவின்கர தலமுகம் மதுவே.

3

அவ்வாறு தோற்றமாகும் பிரகாசத்தை யாதொன்றும் ஒப்பாகாத கரிய சிரத்தையும் பிளவைக் கொண்ட நாவையுமுடைய சர்ப்பத்தினது சரீரத்தை வெட்டிய அழகிய கைத்தலத்தைப் பெற்ற நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் தங்களின் இரு கண்களினாலும் தெரியும் வண்ணம் பார்ப்பார்கள். அப்போது அப்பிரகாசமானது அவர்களின் கண்களுக்குத் தெரியாதிருக்கும் பின்னரும் முன்போலவே தோற்றமாகும் இவ்வற்புதத்தை யாரோடும் பிரித்தெடுத்துச் சொல்லார்கள். மனசின்கண் பொருந்தா நின்ற சந்தோஷமும் பயங்கரமும் உண்டாகும்படி அறிவினாலேயே தெளிவடைவார்கள்.

1244. திசையனைத் தினுமந் தரத்தினு மிகுந்த
திசையினு மிரவினும் பகலு
மிசையுறச் சிறிது தொனிகளே பிறக்கு
மெதிர்ந்துநோக் கிடிலுருத் தெரியா
திசையினும் பிரியா தடுத்துறைந் தவர்தஞ்
செவியினு மத்தொனி சாரா
வசையறுங் குறைசிக் குலத்துறுங் குரிசின்
மனத்தினி லதிசயம் பெறுவார்.

4

அன்றியும், எண்டிசைகளிலும் ஆகாயத்திலும் அங்கிருக்கப் பெற்ற திசைகளிலும் இராக் காலங்களிலும் பகற் காலங்களிலும் சிறிது சத்தங்கள் பொருந்தும் வண்ணம் உண்டாகும். எதிர்த்துப் பார்த்தால் யாதொரு சொருபத்தையுங்காணாது அசைந்து சென்றாலும் அத்தொனிகள் நீங்காது நெருங்கித் தங்கி யிருக்கப்பட்டவர்களின் காதுகளிலும் கேளாது. அதனால் குற்றமற்ற குறைஷிக் கூட்டத்திற் பொருந்திய குரிசிலான நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் தங்களினது மனத்தின்கண் ஆச்சரிய மடைவார்கள்.

1245. இவ்வண்ணஞ் சிறிது பகனிகழ்ந் ததற்பி
னெழில்பெறும் வரிசிலைக் குரிசின்
மைவண்ண விழியா ரிடத்தினி லுறையா
மற்றொரு வரையுடன் கூட்டாச்
செவ்வண்ணக் கருத்திற் றனியிருப் பதற்கே
சிந்திக்கு மதன்படி தேறி
யெவ்வரை யிடத்துங் காலினி லேகி
யெழில்பெறத் தனித்தனி யிருப்பார்.

5

இந்தப்படியாகக் கொஞ்சநாள் நடந்ததின் பின்னர் அழகு பெற்ற நெடிய வில்லையுடைய குரிசிலான நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் மையைக் கொண்ட அழகிய கண்களையுடையவர்களான கதீஜாநாயகியவர்களிடத்தில் தங்காமலும் வேறேயொருவரைத் தங்களோடு சேராமலும் செவ்விய குணத்தை யுடைய தங்களின் கருத்தில் ஏகமாய் இருப்பதற்கு எண்ணும். அந்த எண்ணத்தின்படி தெளிந்து எந்த மலைக ளிடத்திலும் தங்களின் பாதங்களினால் ஒப்பற நடந்து சென்று அழகுபெறும் வண்ணம் தனியாகவே தங்கி யிருப்பார்கள்.

1246. உலகினிற் பிறந்து வருமெழு வகைக்கு
முயிரெனுஞ் சலதரக் கவிகை
நிலைபெறு நிழலார் முகம்மது தனித்து
நிறைகதிர் தவழ்கிறா மலையி
னலனுற வுலவி மனனுறும் படியே
நாலுநா ளிரண்டுநா ளிருந்து
சிலையென வளைந்த சிறுநுதற் கதீசா
திருமனை யிடத்தினில் வருவார்.

6

அவ்வாறு உலகத்தின்கண் உதயமாய் வராநிற்கும் தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரமாகிய இவ்வெழுவகைத் தோற்றத்திற்கும் ஜீவனென்று சொல்லும் மேகக்குடை நிலை பெற்ற நிழலையுடைய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் வரிசையாகிய கிரணங்கள் தவழா நிற்கும் ஹிறாமலையின்கண் நன்மையுறும்படி ஏகமாய் உலாவித் தங்களின் மனமானது பொருந்தும் வண்ணம் நாலுநாள் இரண்டுநாள் தங்கியிருந்து விற்போலும் வளைந்த சிறிய நெற்றியை யுடைய கதீஜாநாயகியவர்கள் தங்கியிருக்கும் தெய்வீகம் பொருந்திய வீட்டின்கண் வருவார்கள்.

1247. வரிசைக்குங் கதிக்கு முதற்றிருத் தலமாய்
மதித்திட வருங்கிறா மலையி
லுருசிக்குங் கனிவாய் மடமயிற் கதீசா
வுடன்வர முகம்மது மெழுந்து
தெரிசிக்கப் பொருந்து மமரர்தம் முருவுந்
தெரிந்திடா தவணிடை யிருந்து
பரிசுத்த மனைய குயிலொடுந் தாமும்
பகற்பொழு தாற்றியே வருவார்.

7

அன்றியும், சங்கைக்கும் மோட்சத்திற்கும் ஆதியான தெய்வீகம் பொருந்திய இடமாய் யாவர்களும் மதிப்பிடும்படி வந்த ஹிறாமலையில் இனித்திடும் இனிப்பைக் கொண்ட கனிபோலும் வாயை யுடைய இளமயிலாகிய கதீஜாநாயகி யவர்கள் தங்களோடு வரும் வண்ணம் நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் எழும்பிப் பார்ப்பதற்காகப் பொருந்தும் தேவர்களுடைய சொரூபமும் தோற்றாது அவ்விடத்தின் கண்ணே தங்கியிருந்து பகற்காலத்தைக் கழித்துப் பரிசுத்தத்தைப் போன்ற குயிலான அக்கதீஜா நாயகி யவர்களுடன் தாங்களும் வீட்டிற்குத் திரும்பி வருவார்கள்.

1248. மக்கநன் னகருந் தெருத்தலை மதிளும்
வழியிடைக் கிடந்தகல் லனைத்தும்

புக்குநல் லிடத்திற் றெறிந்தவை யெவையும்
புகழொடு முகம்மது தமக்குத்
தக்கநற் பொருளா யுறுசலா முரைக்குந்
தனித்தொனி யிருசெவி தழைப்ப
மிக்கமெய்ப் புதுமை தனையுணர்ந் துணர்ந்து
மிகக்களித் ததிசயித் திருப்பார்.

8

அன்றியும், நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களுக்கு நன்மை பொருந்திய திருமக்கமா நகரமும் வீதிகளினிடத்துள்ள மதில்களும் பாதையின்கண் கிடக்கப் பெற்ற கற்கள் முழுவதும் அவர்கள் போகின்ற இடத்தில் அவர்களைப் பார்த்த மற்றும் எல்லா வஸ்துக்களும் கீர்த்தியுடன் தகுந்த நல்ல பொருளாக ஒப்பற்ற ஓசையினால் இரு காதுகளும் செழிக்கும் வண்ணம் பொருந்திய சலாம் சொல்லும் அதிகரித்த உண்மையான அவ்வாச்சரியத்தைத் தங்களின் மனசின்கண் ஆலோசித்து மிகவும் சந்தோஷித்து ஆச்சரியமுற்றிருப்பார்கள்.

1249. முருகவிழ் புயவள் ளலுக்குறும் வருட
முப்பதிற் றொன்பதின் மேலாய்த்
தெரிதருந் திங்க ளாறுஞ்சென் றதற்பின்
றினந்தொறும் புதுமைய தாக
மருமலர்ச் செழுந்தார்க் கனங்குழற் கதீசா
வெனுமயின் மணமனை யிடத்தி
லிருவிழி துயில மண்ணிடைத் தோன்றா
தெழில்பெறக் கனவுகள் காண்பார்.

9

அன்றியும், தேனானது அவிழ்கின்ற மலர்மாலை யணிந்த தோள்களையுடைய வள்ளலான நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களுக்குப் பொருந்திய வயசானது முப்பத்தொன்பதின் மேலாய்க் காணப்படும் மாதங்களும் ஆறுசென்றதின் பிற்பாடு பிரதிதினமும் ஆச்சரியமாக வாசனை பொருந்திய செழிய புஷ்பமாலையமைந்த மேகம் போலுங் கூந்தலை யுடைய கதீஜாவென்று சொல்லும் மயிலானவர்களினது பரிமளத்தை யுடைய வீட்டின்கண் இரண்டு கண்களும் நித்திரை செய்யவே, இவ்வுலகத்தில் தோற்றாத அழகு பெறும் வண்ணம் சொப்பனங்கள் காணுவார்கள்.

1250. வெண்டிரைக் கடலி லமுதமும் பொருவா
வியனுறு மெல்லிதழ்க் கதீசா
கொண்டுறு மயலு ளுயிரினு முயிராய்க்
குலவிய முகம்மது நயினார்
வண்டுறை மலர்ப்பஞ் சணைமிசைப் பொருந்தி
மறுவிலா தொளிர்மதி முகத்துக்
கண்டுயில் பொழுதிற் கனவுக ளனைத்துங்
கண்டது கண்டதாய்ப் பலிக்கும்.

10

அவ்வாறு வெள்ளிய அலைகளை யுடைய சமுத்திரத்தின் அமிர்தமும் ஒப்பாகாத அதிசயம் பொருந்திய மெல்லிய அதரங்களைப் பெற்ற கதீஜாநாயகி யவர்கள் தங்களின் மனசிற்கொண்டு அதிகரியா நிற்கும் ஆசையினால் சரீரத்தினகம் பொருந்தும் ஜீவனிலும் ஜீவனாய்க் குலவப் பெற்ற ஆண்டவர்களான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் தேனீக்கள் தங்காநின்ற புஷ்பங்களினாலான பஞ்சணையின்மீது பொருந்திக் குற்றமில்லாது பிரகாசிக்கின்ற சந்திரன் போன்ற முகத்தினது கண்கள் நித்திரை செய்யும் காலத்தில் பார்த்த சொப்பனங்க ளெல்லாம் பார்த்தது பார்த்ததாகவே வாய்க்கும்.

1251. துய்யவ னருளா லாதமா மனுவாய்த்
தோன்றிய வவனியின் வருட
மையமி லாறா யிரத்தினி லொருநூற்
றிருபத்து மூன்றினி லழகா
வையக மதிக்கு முகம்மதின் வயது
நாற்பதில் றபீவுலவ் வலினி
லெய்திய வெட்டாந் தேதியிற் சனியி
னிரவினிற் கிறாமலை யிடத்தில்.

11

பரிசுத்தத்தை யுடையவனான ஹக்கு சுபுகானகுவத்த ஆலாவின் திருவருளினால் மூலபிதாவாகிய நபி ஆதமலைகிஸ்ஸலா மவர்கள் இப்பூலோகத்தின்கண் பெருமை தங்கிய மானிட வடிவமாய் உதயமான சந்தேகமற்ற வருடமானது ஆறாயிரத்தி யொருநூற்றி யிருபத்துமூன்றில் இப்பூமி முழுவதும் அழகாக மதியாநிற்கும் நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் வயதானது நாற்பதில் றபீயுல் அவ்வல் மாதத்திற் பொருந்திய தேதி எட்டில் சனிக்கிழமை இராவில் ஹிறாமலையி னிடத்தில்.

1252. நித்தில நிரைத்த விருசிறை யொழுங்கு
நீணிலாக் கதிர்கள்விட் டொழுக
வித்துரு மத்தாள் சிறந்தணி திகழ
வில்லுமிழ் கரங்கிடந் திலங்கப்
பத்திவிட் டெறிக்குஞ் செம்மணி யிருகட்
பார்வையிற் கருணைவீற் றிருக்கச்
சித்திர வடிவைச் சுருக்கிமா னிடர்போற்
செபுறயீ லவ்விடத் தடைந்தார்.

12

முத்துக்களை நிரைக்கப் பெற்ற இரு சிறகுகளின் ஒழுங்குகளும் நீண்ட பிரகாசத்தினது கிரணங்களை விட்டு ஒழுகவும், பவளம் போன்ற இருபாதங்களும் சிறப்புற்று அழகு பிரகாசிக்கவும், ஒளியை யுமிழ்கின்ற இருகைகளும் கிடந்து ஒளிரவும், வரிசை விட்டுப் பிரபையை வீசாநிற்கும் சிவந்த இரத்தினம் போன்ற இரண்டு கண்களினது பார்வைகளிலும் கிருபையானது வீறுடனிருக்கவும், தங்களின் அழகிய சொரூபத்தைச் சுருங்கச் செய்து மனுஷியர்களைப் போல அமராதிபரான ஜிபுரீல் அலைகிஸ்ஸலா மவர்கள் அவ்விடத்தின்கண் வந்து சேர்ந்தார்கள்.

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

1253. மானுட வடிவாய் வந்த வானவர்க் கரசன் செவ்வி
யானனக் குரிசி லென்னு மகுமதின் வதன நோக்கி
நானமுங் கியமெய்ச் சோதி நாயகா வரையின் கண்ணே
தீனுற விருக்கின் றீரோ வென்றுசே ணடைந்தா ரன்றே.
13

அவ்வாறு மனுஷியசொரூபமாய் வரப்பெற்ற தேவராதிபரான ஜிபுறீல் அலைகிஸ்ஸலா மவர்கள் அழகிய முகத்தைக் கொண்ட குரிசிலென்று சொல்லும் அஹ்மதென்னும் திருநாமத்தையுடைய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் வதனத்தைப் பார்த்து, கஸ்தூரி வாசனை முங்கப் பெற்ற காத்திரத்தினது பிரகாசத்தையுடைய நாயகமானவர்களே! இம்மலையினிடத்தில் தீனுல் இஸ்லாமென்னும் மார்க்கமானது வந்து பொருந்துதற்காக இருக்கின்றீர்களோ? என்று சொல்லிவிட்டு ஆகாயத்தின்கண் போய்ச் சேர்ந்தார்கள்.

1254. மற்றைநாட் பருதி ராவில் கிறாமலை யிடத்தில் வானோர்
கொற்றவ ருறைந்து வள்ளற் குவவுத்தோள் வனப்பு நோக்கி
யுற்றவென் னுயிரே நீரிங் குறைந்தினி ரோவென் றோதி
வெற்றிவெண் விசும்பு கீறி மேலுல கிடத்திற் சார்ந்தார்.
14

அவ்விதம் போய்ச் சேர்ந்த அமரேசுவரரான ஜபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்கள் மற்ற நாளாகிய ஞாயிற்றுக் கிழமை இராவில் அந்த ஹிறாமலையின்கண் வந்து தங்கிய வள்ளலான நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் திரட்சியுற்ற இரு புயங்களினது அழகையும் பார்த்துப் பொருந்திய எனது ஜீவனானவர்களே! நீங்கள் இவ்விடத்தில் தங்கினீர்களோ? என்று சொல்லி வெற்றியையுடைய வெள்ளிய ஆகாயத்தைப் பிளந்து சொர்க்கலோகம் போய்ச் சேர்ந்தார்கள்.

1255. விண்ணகத் தரசன் தோன்றும் விதிமுறை யறியா வள்ளன்
மண்ணகத் திவரை நேரும் வனப்பினில் விசையி லந்தக்
கண்ணகன் வான நாட்டுங் காண்குற வரிதே யென்ன
வெண்ணமுற் றிதயத் தாராய்ந் திருப்பிடம் பெயர்ந்தி ராரால்.
15

ஆகாயலோகத்தின் அதிபரான ஜபுறயீல் அலைகிஸ்ஸலாமவர்கள் உதயமாகும் விதத்தினது ஒழுங்குகளை யுணராத வள்ளலாகிய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் இடமகன்ற இப்பூலோகத்திலும் அந்த வானலோகத்திலும் இவரைப் போல் பொருந்தும் அழகிலும் துரிதத்திலும் பார்ப்பது அரிதாகுமென்று சொல்லி மனசின்கண் சிந்தித்துத் தாங்கள் இருந்த இடத்தை விட்டும் பெயர்ந்தார்களில்லர்.

1256. வரிசைநேர் றபீவு லவ்வல் மாதமீ ரைந்து நாளிற்
றெரிதர விளங்குந் திங்க ளிரவினிற் சிறப்பு மிக்கோ
னருளினில் சபுற யீல்வந் தருவரை யிடத்தின் வைகுங்
குரிசிறன் கமலச் செங்கண் குளிர்தர வெதிர்ந்து நின்றார்.
16

அப்போது சங்கை பொருந்திய றபீயுல் அவ்வல் மாதம் பத்தாந்தேதியில் தெரியும் வண்ணம் பிரகாசியா நிற்கும் திங்கள் கிழமையிராவில் வரிசையானது அதிகரித்தவனான அல்லாகு சுபுகானகு வத்த ஆலாவின் திருவருளினால் ஹபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்கள் வானலோகத்தை விட்டும் இறங்கி வந்து அரிதாகிய அந்த ஹிறாமலையின்கண் தங்கியிருக்கும் குரிசிலான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் தாமரை மலர்போலும் சிவந்த இரண்டு கண்களும் குளிர்ச்சியுறும்படி எதிராக நின்றார்கள்.

1257. நானிலம் பரப்புஞ் சோதி நாயகக் கடவு டம்மை
வானகத் திருந்த சோதி வந்துசந் தித்த தேபோற்
கானமர் துண்டச் செங்கட் கலைநிலாத் தவழு மியாக்கை
யீனமில் சபுற யீல்வந் திறையவன் சலாமுஞ் சொன்னார்.

17

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலென்னும் நான்கு வகைப்பட்ட நிலங்களிலும் விரியும்படி செய்யும் பிரகாசத்தையுடைய நாயகக் கடவுளான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களை ஆகாயத்தின்கண் இருக்கப் பெற்ற மின்னலானது வந்து சந்தித்ததைப் போல வாசனை தங்கிய முகத்தினது சிவந்த கண்களையும் சந்திரனது பிரகாசத்தை யொத்த பிரகாசமானது தவழா நிற்கும் சரீரத்தையுமுடைய குற்றமற்ற ஜபுறயீல் அலைகிஸ்ஸலாமவர்கள் அவ்வாறு வந்து யாவற்றிற்கும் இறைவனான ஜல்லஷானகு வத்த ஆலாவின் சலாமும் சொன்னார்கள்.

1258. மரகதப் பத்தி கோலி வச்சிரத் தாரை சாத்திs
யுரகமா மணிக ணாப்ப ணொளிபெறக் குயிற்றி வெள்ளைத்
தரளமென் புருட ராகம் பலமணி தயங்கத் தாக்கிச்
சொரிகதிர் பரப்புஞ் சோதித் துகிலினைக் கரத்திற் கொண்டார்.

அவ்வாறு சொன்ன ஜபுறயீல் அலைகிஸ்ஸலாமவர்கள் மரகதத்தினால் பாத்தி வளைந்து வச்சிரத்தினால் தாரை சார்த்தி நடுவில் பிரகாசிக்கும் வண்ணம் பெருமை பொருந்திய நாகரத்தினங்கள் பதித்து வெண்ணிறத்தை யுடைய முத்துக்கள் மெல்லிய புருடராகங்கள் முதலிய பல இரத்தினங்களை ஒளிரும் வண்ணம் அதில் தாக்கிச் சிந்தாநிற்கும் கிரணங்களை விரியச் செய்யும் ஒளியையுடைய ஒரு வஸ்திரத்தைத் தங்களின் கையில் கொண்டார்கள்.

1259. செகமதில் விண்ணி லொவ்வாச் செழுந்துகி லதனை யேந்தி
யகமகிழ்ந் தினிது போற்றி யமரருக் கரசர் வாய்த்த
முகமதி நோக்கி யாதி முறைமறைக் கலிமா வோதி
முகம்மதை விளித்துச் செவ்வி வலக்கரத் திடத்தில் வைத்தார்.

19

அமரேசுவரரான ஜபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்கள் இப்பூலோகத்திலும் ஆகாயலோகத்திலும் ஒவ்வாத செழிய அந்த வஸ்திரத்தை அவ்விதம் தங்களின் கைகளில் தாங்கி மனமகிழ்ச்சியடைந்து இனிமையுடன் துதித்துச் சிறப்புற்ற நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் முகமாகிய சந்திரனைப் பார்த்து யாவற்றிற்கும் முதன்மையனான ஜல்லஜலாலகு வத்த ஆலாவின் ஒழுங்கை யுடைய வேதத்தினது

ழுலாயிலாஹ இல்லல்லாஹூ முஹம்மதுர் றசூலுல்லாஹிழு என்னும் கலிமாவைச் சொல்லி அந்நபிகள் பெருமானைக் கூப்பிட்டு அவர்களின் அழகிய வலதுகையின்கண் வைத்தார்கள்.

1260. மரைமலர் வதனச் சோதி முகம்மதின் கரத்தில் வானோ
ரரசர்மிக் குவகை கூர்ந்தவ் வணிதுகி லிருத்தும் போதிற்
றிரைமுகில் வரையும் விண்ணுந் திகாந்தமு நடுவு மீக்கொ
ளிரைகட லேழும் பாரு மிலங்கொளி விரிந்த தன்றே.
20

அவ்வாறு தாமரை மலர்போலும் முகத்தினது பிரகாசத்தை யுடைய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் கையில் தேவர்களின் அரசரான ஜபுறயீல் அலைகிஸ்ஸலாமவர்கள் சந்தோஷம் அதிகரித்து அலங்காரமாகிய அந்த வஸ்திரத்தை இருத்துகின்ற சமயத்தில், ஒளிர்கின்ற பிரபையானது திரைவைக் கொண்ட மேகங்களையுடைய மலைகளிலும், ஆகாயத்திலும், திசையினது முடிவிலும், நடுவிலும் மேலான ஒளியையுடைய ஏழு சமுத்திரத்திலும் பூலோகத்திலும் விரிவுற்றது.

1261. மண்டலம் புரக்குஞ் செங்கோன் முகம்மதின் வதன நோக்கி
விண்டலம் பரவும் வேத நபியெனும் பட்ட நும்பாற்
கொண்டலே குதாவின் றீந்தா னெனுமொழி கூறிப் பின்னு
மண்டர்வாழ்த் தெடுப்பச் செவ்வி யாரணம் புகறி யென்றார்.
21

அப்போது இந்தப் பூலோக மனைத்தையும் காக்கா நிற்கும் செங்கோலை யுடைய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் முகத்தை ஜிபுரீல் அலைகிஸ்ஸலா மவர்கள் பார்த்து மேகமானவர்களே! ஹக்கு சுபுகானகுவத்த ஆலாவானவன் இன்றையதினம் ஆகாயலோகமும் புகழா நின்ற வேத நபியென்று சொல்லும் ஓர் பட்டத்தை உங்களிடத்தில் தந்தானென்னும் வார்த்தையைச் சொல்லி மறுத்தும் தேவர்களான மலாயிக்கத்துமார்கள் வாழ்த்தும் வண்ணம் அழகிய வேதத்தை யோதுங்க ளென்று சொன்னார்கள்.

1262. செப்பிய வசனங் கேட்டுச் செபுறயீல் முகத்தை நோக்கி
முப்படி விளங்கும் வண்ண முழுமணிக் குரிசி லேயா
னிப்பெரும் புவியிற் றீட்டு மெழுத்திலொன் றறியே னாதி
யொப்பரும் வேத மென்ப தோதினே னல்ல னென்றார்.
22

நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள் அவ்வாறு சொல்லிய வார்த்தைகளைத் தங்களின் இரு காதுகளினாலும் கேள்வியுற்று ஜிபுரீல் அலைகிஸ்ஸலா மவர்களின் முகத்தைப் பார்த்து வானம், பூமி, பாதாளமென்னும் மூன்று லோகங்களும் பிரகாசியா நிற்கும் அழகிய பூரணரத்தினம் போன்ற குரிசிலானவர்களே! யான் இந்தப் பெரிந பூமியின்கண் எழுதும் எழுத்தில் ஒன்றேனும் அறிய மாட்டேன். அன்றியும், ஒப்புதற்கரிய வேதமென்று சொல்லுவதையும் ஓதினவ னல்லேனென்று சொன்னார்கள்.

1263. சிறைநிறஞ் சுருக்கித் தோன்றுஞ் செபுறயீல் முதலோன் கூறு
முறைவழி முகம்ம தன்பான் முன்னிருந் திருகை யார
விறுகுறத் தழுவிப் பின்ன ரியம்புமென் றியம்பத் தோன்றன்
மறைமுதல் வசன நாவின் வழக்கின னல்ல னென்றார்.

23

அதைக் கேட்ட சிறகுகளினது பிரகாசத்தைச் சுருங்கச் செய்து மானிட வடிவமாய்த் தோன்றா நிற்கும் ஜிபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்கள் யாவற்றிற்கும் ஆதியான அல்லாகு சுபுகானகுவத்த ஆலாவானவன் சொல்லும் முறைமயினொழுங்காய் அன்போடும் நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் முன்னர் இருந்து தங்களின் இரண்டு கைகளினாலும் பொருந்தும்படி நெருங்கும் வண்ணம்
கட்டியணைத்துப் பிற்பாடு ஓதுங்களென்று சொல்லத், தோன்றலாகிய அந்நபிகள் பெருமானவர்கள் வேதத்தினது ஆதிவார்த்தையாவது யான் எனது நாவில் வழக்கமாக்கினவனல்லேனென்று சொன்னார்கள்.

1264. எதிரிருந் தரசர் பின்னு மிடருறத் தழுவி நோக்கி
மதியினு மிலங்குஞ் சோதி முகம்மதே யோது மென்னப்
புதுமையி னரிய பேறே புவியிடத் தரிய வேதங்
கதிபெறக் கண்டுங் கேட்டுங் கற்றறிந் திலனியா னென்றார்.

24

அவ்வாறு சொல்லவே அமராதிபரான ஜிபுறயீல் அலைகிஸ்ஸலாமவர்கள் மறுத்தும் நாயகம் றசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் முன்னராக இருந்து அவர்களைத் துன்பமுறும் வண்ணம் கட்டியணைத்துப் பார்த்துச் சந்திரனைப் பார்க்கிலும் அதிகமாய்ப் பிரகாசியா நிற்கும் பிரபையையுடைய முகம்மதென்பவர்களே! ஓதுங்களென்று சொல்ல, ஆச்சரியத்தையுடைய அரிய பேறானவர்களே! யான் கதிபெறும்படி இப்பூலோகத்தின்கண் அருமையான வேதத்தைக் கண்களினாற் கண்டாயினும் அல்லாது காதுகளினாற் கேள்வியுற்றாயினும் கற்றுணர்ந்தவ னல்லேனென்று சொன்னார்கள்.

1265. கேட்டுவா னவர்கோ மானுங் கிளரொளி வனப்பு வாய்ந்த
தோட்டுணை நெருங்க வுள்ளந் துனிவர வுடலஞ் சோரப்
பூட்டிய கரங்கள் சேப்பப் புல்லிநந் நபியை நோக்கி
மீட்டுமெய்ம் மறைநூன் மாற்றம் விரித்தெடுத் தியம்பு மென்றார்.

25

நமது நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் அவ்வாறு சொல்லியதை அமரேசுவரரான ஜபுறயீல் அலைகிஸ்ஸலாமவர்களும் தங்களின் இரு காதுகளினாலும் கேள்வியுற்று ஓங்கா நிற்கும் பிரகாசத்தினது அழகானது சிறக்கப் பெற்ற அவர்களின் இரு தோள்களும் நெருங்கவும், மனதில் துன்பமுண்டாகவும், சரீரமானது தளரவும், பூட்டிய இரண்டு கைகளும் சிவக்கவும், கட்டியணைத்து அந்நபியவர்களைப் பார்த்து மறுத்தும் உண்மையான வேத நூலின் வாசகத்தை விரித்து எடுத்து ஓதுங்களென்று சொன்னார்கள்.

1266. நெருக்கிவிட் டதற்பின் வேத நெறிநபி யுள்ளத் துள்ளே
திருக்கிளர் புவியில் விண்ணோர் தெளிதரு மறிவு முன்னு
லிருக்கினி லறிவுந் தோன்றி யிடனறப் பெருகி நல்லோ
ருருக்கொளு மரசை நோக்கி யோதவேண் டுவதே தென்றார்.

26

அவர்கள் அவ்வாறு நெருக்கிவிட்டதின் பிற்பாடு வேதத்தினது சன்மார்க்கத்தையுடைய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் தங்களின் மனதினகம் செல்வமானது ஓங்குகின்ற பூமியின்கண் தேவர்களான மலாயிக்கத்துமார்கள் தேரா நிற்குமுணர்வும் முந்நூலாகிய வேதத்தினது உணர்வும் உதயமாகி இடமில்லாது அதிகரித்து நன்மைபொருந்திய ஒப்பற்ற மானிட வடிவங் கொண்டிருக்கும் அமரேசுவரரான ஜபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்களைப் பார்த்து யான் ஓதவேண்டியது யாது? அதைச் சொல்லுங்களென்று கேட்டார்கள்.

1267. மிக்குயர் மறையின் வள்ளல் விளம்பவிண் ணவர்கள் கோமா
னிக்றவு வெனும்சூ றத்தி லிருந்துநா லாயத் தின்ப
மெய்க்குற மாலம் யகுல மெனுமட்டும் விளம்பு வீரென்
றொக்கலி லுயிரின் மிக்கா யுறுநபிக் குணர்த்தி னாரால்.

27

மிகுந்த மேன்மையை யுடைய வள்ளலான நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் அவ்வாறு கேட்க, அமரேசுவரரான ஜபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்கள் இக்றவு என்று சொல்லும் சூறத்திலிருந்து நான்காயத்து மாலம் யகுலம் என்று சொல்லும் வரையும் ஓதுங்களென்று இனிமையானது சரீரத்தின்கண் பொருந்தும் வண்ணம் சொல்லிக்காட்டி உறவினரைப் பார்க்கிலும் உயிரைப் பார்க்கிலும் அதிகமாய்ப் பொருந்தா நிற்கும் அந்நபிகள் பெருமானவர்களுக்கு அறிவித்தார்கள்.

1268. எழுத்தினிற் றவறாச் சொல்லி னியன்முறை சிதகா வின்பம்
பழுத்தபண் ணொலியாத் தீய்ந்த பயிருயிர் பெறுவ தாகச்
செழித்தமெய் சபுற யீல்தஞ் செவியகங் குளிரக் கல்வி
யழுத்திய பொருளுட் டோன்ற வகுமது மோதி னாரால்.

28

அஹ்மதென்னும் திருநாமத்தை யுடைய நாயகம் நபிமுகம்மது முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் அட்சரத்தில் தப்பாத வார்த்தைகளின் இயலினது ஒழுங்கு சிதகாது இனிமை முற்றிய இராகத்தினது ஓசையினால் கரிந்த பயிர்கள் ஜீவனையடைவதாகவும், சத்தியமானது செழிக்கப் பெற்ற ஜபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்கள் தங்களின் செவிகளும் மனமும் குளிர்ச்சியுறவும், அறிவானது பதியப்பட்ட பொருளானது மனசின்கண் தெரியவும் தங்களின் திருவாய் மலர்ந்து ஓதினார்கள்.

1269. உறைந்தமெய்ம் மறையின் றீஞ்சொன் முகம்மதாண் டுரைப்பச் செவ்வி
யறந்தழைத் தனநன் மார்க்கத் தரும்புவி தழைத்த வெற்றித்
திறந்தழைத் தனவிண் ணோர்கள் செயறழைத் தனதி காந்தப்
புறந்தழைத் தனநந் தீனின் புகழ்தழைத் தோங்க வன்றே.

29

நாயகம் நபிமுகம்மது சல்லால்லாகு அலைகிவசல்ல மவர்கள் சத்தியமே யுறையப் பெற்ற புறுக்கானுல் அலீமென்னும் வேதத்தினது இனிய வசனத்தை அவ்வாறு அந்த ஹிறாமலையின் கண் வைத்து ஓதவே, நமது தீனுல் இஸ்லாமென்னும் மார்க்கத்தினது கீர்த்தியானது வளர்வுற்று ஓங்கும் வண்ணம் அழகிய தருமங்களியாவும் வளர்வுற்றன. றூல்ல

சன்மார்க்கத்தையுடைய அரிய இந்தப் பூலோகம் வளர்வுற்றது. வெற்றியையுடைய காரணங்கள் வளர்வுற்றன. வானவர்களான மலாயிக்கத்துமார்களின் செயல்கள் வளர்வுற்றன. திசைகளினது முடிவின் பக்கங்கள் வளர்வுற்றன.

1270. பறவைக ளினங்கள் போற்ற விலங்கினம் பலவும் போற்ற
வுறைதருந் தருக்கள் போற்ற வூர்வன வெவையும் போற்ற
நிறைதரு மலகை போற்ற நிரைநிரைப் பரவை போற்ற
மறைவிலா தமரர் போற்ற முகம்மது மோதி னாரால்.

30

அன்றியும், பட்சிசாதிகளின் கூட்டங்களியாவும் மிருகக் கூட்டங்களியாவும் புகழவும், பூமியின்கண் தங்கா நிற்கும் விருட்சங்களியாவும் புகழவும், ஊர்வனங்களியாவும் புகழவும், நிறைவுற்ற பைசாசங்கள் புகழவும், வரிசையுடைய அலைகளையுடைய சமுத்திரங்கள் புகழவும், மறைவில்லாது தேவர்களான மலாயிக்கத்துமார்கள் புகழவும், நபிகள் பெருமான் நபிமுகம்மது முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் தங்களின் திருவாய் மலர்ந்து ஓதினார்கள்.

1271. உயிரினுக் குயிராய் வந்த முகம்மது முரைப்பக் கேட்டுச்
செயிரறு சபுற யீல்தம் மெய்மயிர் சிலிர்ப்ப வோங்கி
முயலகன் மதியம் போன்ற முகம்மதைப் போற்றி வேக
வெயிலவன் கதிரிற் றூண்டி மேலுல கிடத்திற் புக்கார்.

31

அப்போது குற்றமற்ற ஜபுறயீல் அலைகிஸ்ஸலா மவர்கள் தங்களின் ஜீவனுக்கு ஜீவனாய் வரப் பெற்ற நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களும் தங்களின் திருவாயால் ஓதும் வண்ணம் இரு காதுகளினாலும் கேள்வியுற்றுத் தங்களின் சரீரத்தின் கண்ணுள்ள உரோமங்கள் சிலிர்க்கும்படி வளர்ந்து களங்கமற்ற சந்திரனைப் போன்ற நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களைப் புகழ்ந்து வேகத்தையுடைய சூரியனது கிரணங்களைப் போலத் தூண்டி ஆகாயலோகத்தின்கண் போய்ப் புகுந்தார்கள்.

1272. அரியவன் றூத ரான அகுமது கலக்க முற்று
மருமலர்ச் சோலை சூழ்ந்த மால்வரை யிடத்தை நீங்கி
யெரிபகற் கதிர்க்கா றோன்றா விரவினிற் றனித்து வல்லே
விரிகதி ருமிழும் பைம்பூண் மின்னகத் திடத்திற் சார்ந்தார்.

32

அவர்கள் அவ்விதம் போகவே அரியவனாகிய அல்லாகு சுபுகானகுவத்த ஆலாவின் றசூலான அஹ்மதென்னும் திருநாமத்தையுடைய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் மனசின்கண் அச்சமுற்று வாசனை கொண்ட புஷ்பங்களையுடைய காவுகள் வளைந்த பெரிய அந்த ஹிறாமலையினது இடத்தை விட்டும் நீங்கிப் பிரகாசத்தையுடைய சூரியனது கிரணங்கள் தோற்றப் பெறாத இராக்காலத்தில் ஏகமாக விரைவாய் விரிந்த பிரபையை யுமிழா நிற்கும் பசிய ஆபரணங்களையுடைய மின்னாகிய கதீஜாநாயகி அவர்களின் வீட்டின்கண் வந்தார்கள்.

## கலிநிலைத்துறை

1273. நடுக்க முற்றுமெய்ச் சுரத்தொடுங் குளிர்தர நலிந்து
மிடுக்க கன்றிடப் பயத்தொடு மரிவையை விளித்துத்
திடுக்க முற்றது துகில்கொடு பொதிமனந் தெளியா
திடுக்க ணியாதென வறிகில னென்றன ரிறசூல்.

33

அவ்வாறு வந்து சேர்ந்து றசூலாகிய நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் சரீரம் நடுக்கமுற்றுச் சுரத்தோடும் குளிரும் வண்ணம் மெலிந்து மனப்பயங்கரத்துடன் தங்களின் துன்பமானது நீங்கும்படி மனைவியாகிய கதீஜாநாயகி யவர்களைக் கூப்பிட்டு எனது இருதயம் தேர்ச்சியடையாது தேகம் திடுக்கமுற்றது. அத்துன்பமானது யாதென்று யானறிகிலன். ஆதலால் ஒரு வஸ்திரத்தைக் கொண்டு எனது சரீரத்தைப் பொதியுங்களென்று சொன்னார்கள்.

1274. தலைவர் கூறிய மொழிசெவி புகவுட றயங்கி
நிலைகு லைந்தெழுந் தயர்வொடு நெட்டுயிர்ப் பெறிந்து
பலம லர்த்தொடை செறிந்தபஞ் சணைமிசைப் படுத்திச்
சலவை கொண்டுறப் போர்த்தரு கிருந்தனர் தையல்.

34

அப்போது தையலாகிய கதீஜா நாயகியவர்கள் தங்களின் நாயகரான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் அவ்வாறு சொல்லிய வார்த்தைகள் தங்களின் காதுகளில் நுழையவே, சரீரமானது தயக்கமுற்று தங்களின் நிலைமை குலையப் பெற்று எழும்பிச் சோர்வுடன் பெருமூச்சுவிட்டுப் பல புஷ்பங்களினாலான மாலைகள் நெருங்கிய பஞ்சணையின்மீது
படுக்கும்படி செய்து வஸ்திரத்தைக் கொண்டு பொருந்தும் வண்ணம் மூடிப் பக்கத்தில் இருந்தார்கள்.

1275. நொந்து மெய்யகம் பதறிடக் கணவரை நோக்கி
யெந்த னாருயி ரேயிக லடலரி யேறே
சிந்தை சிந்திமெய்த் திடுக்கொடு மதிமுகந் தேம்ப
வந்த வாறெவை யுரைக்கவென் றுரைத்தனர் மடமான்.

35

அவ்விதமிருந்த இளமானாகிய கதீஜாநாயகி யவர்கள் தங்களின் சரீரமும் மனமும் வருத்தமுற்று நடுங்கும் வண்ணம் நாயகரான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களைப் பார்த்துப் பொருந்திய எமது ஜீவனானவர்களே! பகைமையாகிய யானைகட்கு வலிமையையுடைய ஆண்சிங்கமானவர்களே! தங்களின் கருத்தானது அழியப் பெற்றுச் சரீரத் திடுக்கத்துடன் முகம் வாட்டமடைவதற்குத் தங்களில் வந்து சேர்ந்த வரலாறு யாவை? அவையைச் சொல்லுங்களென்று கேட்டார்கள்.

1276. மலையி னுச்சியி னிருந்தது மொருவர்வந் தடுத்து
நிலைபெ றுந்துகில் கரத்தளித் துரைத்தது நெருங்க
வுலைவு றத்தனி யணைத்தது முரைத்துளப் பயத்தா
லலம லர்ந்தன னென்றன ரரசருக் கரசர்.

36
அப்போது இராஜாதிபரான நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் தாங்கள் ஹிறாமலையினது உச்சியின் கண்ணிருந்ததையும், ஒருவர் அங்கு வந்து தங்களை நெருங்கி நிலைபெறா நிற்கும் ஒரு வஸ்திரத்தைக் கையிற் கொடுத்து சொன்னதையும், நெருங்கும்படி யுலைவுறும் வண்ணம் ஏகமாய்க் கட்டித் தழுவியதையும், அவர்களுக்குச் சொல்லி மனப்பயங்கரத்தினால் வருத்தமுற்றேனென்று சொன்னார்கள்.

1277. துணைவர் கூறிய மாற்றமு மறைகள்சொற் றதுவு
மிணைப டுத்திநேர்ந் தின்பமென் றுளத்தினி லிருத்திப்
பிணையை நேர்விழிக் கனிமொழிச் சிறுபிறை நுதலா
ரணையுந் தம்வயிற் றுனிபல வகற்றின ரன்றே.

37
மானை நிகர்த்த கண்களையும் கனி போன்ற வார்த்தைகளையுங் கொண்ட இளஞ்சந்திரன் போலும் நெற்றியை யுடையவர்களான கதீஜா நாயகியவர்கள் தங்களின் நாயகரான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் அவ்வாறு சொல்லிய சமாச்சாரங்களையும் வேதங்கள் சொல்லியதையும் இணைபடுத்தி யுடன்பட்டு இனிமையானது தானென்று மனத்தின் கண் இருக்கும்படி செய்து தம்மிடத்திற் பொருந்தா நிற்கும் பல துன்பங்களையும் நீக்கினார்கள்.

1278. தாங்கு மெய்ப்பொரு ளறிவருள் குணந்தய விரக்க
நீங்கி டாதறம் பெருகிட வளர்க்குநன் னெறியீ
ரோங்கு மானிலத் திடத்துறை பவர்களா லுமக்குத்
தீங்கு றாதென வுரைத்தனர் மடந்தையர் திலதம்.

38
அவ்விதம் நீக்கிய பெண்களிற் றிலதமாகிய கதீஜாநாயகியவர்கள் தாங்கா நிற்கும் சத்தியப் பொருள் அறிவு, அருள், குணம், தயவு, இரக்கமாகிய இவைகள் நீங்காது புண்ணியமானது அதிகரிக்கும்படி வளர்க்குகின்ற நல்ல சன்மார்க்கத்தை யுடையவர்ளே! உங்களுக்கு ஓங்கா நின்ற பெரிய இந்தப் பூலோகத்தின்கண் தங்கியிருப்பவர்களினால் யாதொரு தீமையும் வந்து சாராதென்று சொன்னார்கள்.

1279. சிந்து தேன்மொழிச் செழுங்குயில் தூதெனுந் திருப்பேர்
வந்த தாமெனத் தெருளுற முகம்மது நயினா
ருந்து வெங்குபிர் களைவதித் தரமென வுயர்வா
னிந்து நேரிரு ளொடுக்கிவிண் ணெழுந்தன னிரவி.

39
அப்போது சூரியனானவன் தேனைச் சொரிகின்ற வார்த்தைகளையுடைய செழிய குயிலாகிய கதீஜா நாயகியவர்கள் தங்களின் நாயகருக்கு றசூலென்று சொல்லும் திருநாமம் வந்ததாமென்று சொல்லித் தெளிவடையவும், ஆண்டவர்களான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் ஓங்கா நிற்கும் வெவ்விய குபிரானவர்களை இல்லாமற் செய்வது இம்முறைதானென்று சொல்லவும், உயர்ச்சியுற்ற ஆகாயத்தின் கண்ணுள்ள கரியைப் போன்ற அந்தகாரத்தை ஒடுங்கும் வண்ணம் செய்து வானத்தின்கண் ணெழும்பினான்.

1280. நிறக்க ருங்கழு நீர்குவி தரநிறை வனசந்
திறக்க மெல்லிதழ் வெய்யவ னெழுந்தபின் றிருவு
மொறக்கத் தென்னுமவ் வேந்தனைக் கொணர்கென வொருவ
னறக்க டும்விசை கொண்டெழுந் தேகின னன்றே.

40

கரிய பிரகாசத்தையுடைய ஆம்பன் மலர்கள் குவியவும் தாமரைமலர்கள் நிறைந்த தங்களின் மெல்லிய இதழ்களைத் திறக்கவும் அவ்வாறு சூரியனானவ னெழும்பின பிற்பாடு இலக்குமியாகிய கதீஜா நாயகியவர்களும் நபி றசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களும் உறக்கத்தென்று சொல்லும் அவ்வரசனானவனைக் கூட்டிக் கொண்டு வருவாயாகவென்று கட்டளைசெய்ய, ஒரு வேலையாளன் மிகவும் அதிகவிசை கொண்டு எழும்பி அவ்வுறக்கத் திருக்கும் வீட்டினது திசையை நோக்கிப் போயினான்.

1282. மடங்க லேறெனு முகம்மதும் வரிபரந் திருண்ட
விடங்கொள் வேலினை நிகர்த்துமை பொருவிழி மயிலு
முடன்க லந்தினி தழைத்தனர் வருகவென் றுணர்வு
துடங்கு மும்மறை தெளிந்தவற் குரைத்தனன் றூதன்.

41

அவ்விதம் எழுந்து போன தூதனாகிய வேலையாளன் ஆண்சிங்கமென்று சொல்லும் நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிசவல்ல மவர்களும் இரேகைகள் படர்ந்து கறுத்தவிடத்தைக் கொண்ட வேலாயுதத்தைப் போன்று மையானது பொருந்திய கண்களையுடைய மயிலாகிய கதீஜாநாயகியவர்களும் ஒருவரோடொருவர் உடன் கலந்து உன்னை இனிமையுடன் கூப்பிட்டார்கள். வருவாயாகவென்று அறிவானது தொனங்கா நிற்கும் முன்னுள்ள தௌறாத்து, இஞ்சீல், சபூறென்னும் மூன்று வேதங்களையுங் கற்றுத் தெளிந்தவனான அவ்வுறக்கத் தென்பவனுக்குச் சொன்னான்.

1282. பழுதி லாக்குலப் பாவைதம் பாலினிற் பரிவா
யெழுக வென்றன ரென்றசொற் சிரமிசை யேத்தி
வழுவி லாமறை வொறக்கத்தென் றோதிய வள்ளற்
றழுவு மெய்க்கதிர் முகம்மது மனைவயிற் சார்ந்தான்.

42

குற்றமற்ற வேதங்களை யுணர்ந்த உறக்கத்தென்று சொல்லிய வள்ளலானவன் பழுதில்லாத மேன்மையையுடைய பாவையாகிய கதீஜாநாயகியவர்களின் பக்கத்தில் அன்போடும் எழும்புவாயாக என்று சொன்னார்களென்று சொல்லிய வார்த்தைகளைத் தலையின்மீது கொண்டு தழுவுகின்ற சத்தியப் பிரகாசத்தையுடைய நாயகம் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களினது வீட்டின்கண் வந்து சேர்ந்தான்.

1283. கற்ற வேதியன் வருதலுங் கிளிமொழிக் கதீசா
பொற்றொ டிக்கரஞ் சாய்த்திவ ணுறைகெனப் புகன்று
மற்ற டப்புய முகம்மனது வரையிடைப் புதுமை
யுற்ற செய்தியுண் ரறிகவென் றுரைத்தார்.

43

வேதங்களைப் படித்த வேதியனான அவ்வுறக்கத்தென்பவன் அவ்வாறு வந்த மாத்திரத்தில் கிளிபோலும் வார்த்தைகளையுடைய கதீஜாநாயகியவர்கள் தங்களின் பொன்னாலாகிய வளையல்களையுடைய கையை அசைத்து இவ்விடத்தில் தங்கியிருப்பாயாகவென்று சொல்லித் தங்களின் நாயகரான வலிமையமைந்த விசாலமாகிய தோள்களையுடைய நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் ஆச்சரியமாக ஹிறாமலையின்கண் அடைந்த சமாச்சார முண்டுமென்று சொல்லி அதை நீ அவர்களிடத்தில் கேட்டு அறிவாயாகவென்று சொன்னார்கள்.

1284. பதியின் மிக்கநன் மறையவன் முகம்மதை நோக்கித்
துதிசெய் தும்முழை வந்தவா றனைத்தையுந் தொகுத்து
முதிர்த ரும்புக ழோயுரை கென்றலு முறையா
விதிய வன்றிருத் தூதர்நன் றெனவிளம் புவரால்.

44

அதைக் கேட்ட இப்பூமியின்கண் மிகுந்த நன்மையையுடைய வேதியனான அவ்வுறக்கத் தென்பவன் நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களைப் பார்த்துப் புகழ்ந்து முற்றிய கீர்த்தியையுடையவர்களே! தங்களிடத்தில் வந்த வரலாறுகளெல்லாவற்றையும் ஒழுங்காய் என்னிடத்தில் சொல்லுங்ளென்று கேட்டமாத்திரத்தில், வரிசையாக சகல ஜீவராசிகளுக்கும் இன்னபடியென்று நியமிக்கும் விதிப்பை யுடையவனான ஜல்லஜலாலகு வத்த ஆலாவின் திருத்தூதராகிய அந்நபிகள் பெருமானவர்கள் நல்லதென்று சொல்லுவார்கள்.

1285. வரையி னிற்றனி யிரவினி லிருக்கையின் மதியி
னுரையின் மிக்கவ ரொருவர்வந் தென்பெய ருரைத்துப்
பரிவி னாலிவ ணுறைந்தினி ரோவெனப் பகர்ந்து
விரைவி னின்மறு நாளுமவ் வுரைவிளம் பினரால்.

45

யான் தனியாக இராக்காலத்தில் ஹிறாமலையின்கண் இருக்கும் போதில் அழகையுடைய வார்த்தைகளினால் மிகுந்தவரான ஒருவர் என்னிடத்தில் வந்து எனது நாமத்தைச் சொல்லி அன்பினால் இவ்விடத்தின்கண் தங்கினீர்களோ? என்று கூறிச் சீக்கிரத்தில் மற்றநாளும் அந்த வார்த்தைகளையே சொன்னார்.

1286. இருதி னத்தினு முரைத்தவர் மறுதினத் தெய்தித்
தெரிம ணித்துகி லெனதுசெங் கரத்தினிற் சேர்த்தி
யரிய நாயக நபியெனும் பெயருமக் களித்தா
னுரிமை யீரினி யோதுமென் றுரைத்தன ருவந்தே.

46

அவ்வாறாக இரண்டு நாளிலும் சொன்ன அவர் மறுநாளாகிய மூன்றாம் நாளில் என்னிடத்தில் வந்து பொருந்தி இரத்தினவர்க்கங்கள் விளங்கிய ஒரு வஸ்திரத்தை செவ்விய எனது கையிற் சேர்த்து சினேகிதரான முகம்மது சல்லல்லாகு அலைகிவசல்லமானவர்களே! உங்களுக்கு அரிய நாயகனான அல்லாகு சுபுகானகுவத்த ஆலாவானவன் நபியென்று சொல்லும் ஓர் பட்டத்தைக் கொடுத்தான். நீங்கள் இனியோதுங்களென்று ஆசையோடும் சொன்னார்.

1287. ஓது மென்றசொற் கேட்டலு மோதின னலனென்
றோத முன்னிருந் திருகையி னிறுக்கிமுன் னுரைபோ
லோது மென்றலும் பின்னரு மோதின னலனென்
றோத மற்றுமென் றனைமிக விறுக்கின ருரத்தின்.

47

அவர் அவ்விதம் ஓதுங்களென்று சொல்லிய வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் யான் ஓதினவனல்லேனென்று சொல்ல, அவர் எனது முன்னாக இருந்து அவரின் இருகைகளினாலும் என்னைக் கட்டியிறுக்கி முன்னர் சொன்ன வார்த்தையைப் போல ஓதுங்களென்று சொல்லவும், பின்னரும் யான் ஓதினவனல்லேனென்று சொல்லப் பின்னரும் என்னை வலிமையோடு அதிகமாகக் கட்டியிறுக்கி.

1288. மறுத்து மோதுமென் றுரைத்திட மறுத்தனன் மறுத்து
மிறுக்கி யோதுமென் றுரைத்தன ரெதிரிருந் தெளியேன்
றிறக்க வோதுவ தெவையென வுரைத்தனன் றீட்டா
தறத்தி னுட்படுஞ் சொல்லினைக் குறித்தெடுத் தறைந்தார்.

48

மறுத்தும் என்னை ஓதுங்களென்று சொல்ல அதற்கு யான் மறுத்துச் சொன்னேன்; பின்னருங் கட்டியிறுக்கி யோதுங்களென்று சொன்னார். அப்போது எதிராக இருந்து கொண்டு எளியேனாகிய யான் வலிமையுடன் ஓதுவது யாது? என்று கேட்டேன். னுழுதாத அறத்தினுட்படும் வார்த்தைகளைக் குறித்து எடுத்துச் சொன்னார்.

1289. அந்த நல்லுரை கேட்டன னவருரைப் படியே
பிந்தி டாதெடுத் தோதினன் செழும்பொருள் பிறக்க
வெந்தை யீரெனப் போற்றிவிண் ணடைந்தன ரெழிலோய்
வந்த வாறிவை யெனவெடுத் துரைத்தனர் வள்ளல்.

49

அவர் அவ்வாறு சொன்ன அந்த நன்மை பொருந்திய வார்த்தைகளை யான் எனது காதுகளினாற் கேள்வியுற்றேன். அவரின் சொற்படி செழிய பொருளானது தோற்றும் வண்ணம் பிந்தாது எடுத்து ஓதினேன் ஓதவே, எனது தந்தையரான முகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களே! என்று சொல்லிப் புகழ்ந்து ஆகாயலோகம் போய்ச் சேர்ந்தார். அழகையுடைய உறக்கத்தே, வந்து பொருந்திய வரலாறு இவைதானென்று வள்ளலாகிய நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் எடுத்துச் சொன்னார்கள்.

1290. புவியி னிற்பெரும் புதுமைய தாகிய பொருளாய்
நபியு ரைத்தசொ லனைத்தையு மனத்தினி னயந்து
குவித ருங்கதிர்ச் செழுமணிக் கொடியிடைக் கதீசா
செவிகு ளிர்ந்திட மனங்களித் திடப்பொரு டெரிவான்.

நபிகள் பெருமானான நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் அவ்வாறு இப்பூமியின்கண் பெரிய ஆச்சரியமான பொருளாய்ச் சொன்ன வார்த்தைகளெல்லாவற்றையும் உறக்கத் தென்பவன் தனது மனசின்கண் விரும்பி நெருங்கிய பிரகாசத்தைக் கொண்ட செழிய இரத்தினக்கொடிபோலும் இடையையுடைய கதீஜா நாயகியவர்களின் இருகாதுகளும் குளிரவும், மனமானது சந்தோஷிக்கவும், அவற்றின் பொருளைத் தெரிந்துச் சொல்லுவான்.

1291. மலையல் வள்ளனும் மிடத்தினில் வரைமிசை யடைந்த
தலைவர் நாயகன் றூதரிற் சபுறயீல் சரதம்
பலக திர்த்துகில் கரத்தளித் ததுநபிப் பட்டம்
விலக வோதுமென் றோதிய துமக்குறும் வேதம்.

51

வள்ளலாகிய முகம்மதானவர்களே! நீங்கள் மயங்காதீர்கள்! உங்களிடத்தில் மலையின்மீது வந்து சேர்ந்த தலைவரானவர் யாவற்றிற்கும் நாயகனான அல்லாகு சுபுகானகுவத்த ஆலாவின் தூதர்களில் ஜபுறயீலானவர். இது சத்தியம். பலகிரணங்களையுடைய வஸ்திரத்தைக் கையில் தந்தது நபிப்பட்டம் விளங்கும் வண்ணம் ஓதுங்களென்று சொன்னது உங்களுக்கு வந்து சேராநிற்கும் புறுக்கானுல் அலீமென்னும் வேதம்.

1292. உடலு லைந்திட விறுக்கிய துமதிடத் தினிமேல்
வடுவின் மும்முறை யிடுக்கண்வந் துற்றது மாறும்
படியி டத்தினும் மினத்தவர் பெரும்பகை விளைத்து
மிடரு றும்படி யூரைவிட் டெழுத்துரத் திடுவார்.

52

சரீரமானது உலைந்திடும்படிக் கட்டியிறுக்கினது இனிமேல் தங்களிடத்தில் மூன்று தரம் குற்றத்தையுடைய இக்கட்டுகள் வந்து பொருந்தி அவை நீங்கிப் போகும். உங்களின் பந்துஜனங்கள் இந்தப் பூமியின்கண் பெரிய பகையைத் துன்பமுறும் வண்ணம் உண்டாக்கியும் தங்களையும் ஊரை விட்டு எழும்பும்படி துரத்துவார்கள்.

1293. என்ற விம்மொழி மறையவ னுரைத்தலு மிசைத்தேன்
றுன்று மென்மலர்ப் புயநபி மனத்தினிற் றுணுக்குற்
றொன்று மென்னினத் தவர்பகை யெனக்குவந் துறுமோ
பொன்று மோவென வுரைத்தலு முதியவன் புகல்வான்.

53

என்று வேதியனான அவ்வுறக்கத்தென்பவன் சொல்லிய இவ்வார்த்தைகளைச் சொன்ன மாத்திரத்தில், இனிய தேனானது நெருங்கிய மெல்லிய புஷ்பமாலையணிந்த தோள்களையுடைய நபிமுகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் மனப்பயங்கரமுற்று எனக்குப் பொருந்திய எனது பந்துக்களின் விரோதம் வந்து சேருமா? அல்லது அவ்விதம் சேராது அழிந்து போகுமா? என்று கேட்கவும் முதியவனான அவன் சொல்லுவான்.

1294. முன்னர் மாமறை நபியெனும் பெயர்முதி யவருக்
கின்னல் வந்துறா திலதுநும் மிடத்திட ரணுகா
நன்ன லம்பெறு நபிகணா யகமுநீ ரலது
மன்னு மானில நபியினி யிலையென வகுத்தான்.

54

ஆதியில் மகத்தான வேதத்தையுடைய நபியென்று சொல்லிய முதியவர்களுக்குத் துன்பமானது வந்து பொருந்தாது இருக்கவில்லை. ஆனால் உங்களிடத்தில் அப்படிப்பட்ட துன்பங்கள் வந்து நெருங்காது. நல்ல மேன்மைபெறா நிற்கும் நபிகளினது நாயகமும் நீரேயல்லாமல் பொருந்திய இந்தப் பெரிய பூமியின்கண் இனிமேல் நபியானவர்களில்லரென்று வகுத்துச் சொன்னான்.

**1295.** **மாத வத்துறும் பொருளெனு முகம்மது நபிதம்**
**பாத பங்கயத் திணைமிசைச் சிரங்கொடு பணிந்து**
**கோதி லாக்கதீ சாதமை யிருகரங் குவித்துத்**
**தீதி லாதெழுந் தேகினன் பலகலை தெளிந்தோன்.**
**55**

அவ்வாறு சொன்ன பல சாத்திரங்களைக் கற்றுத் தெளிந்தவனான அவ்வுறக்கத் தென்பவன் மகாதவத்தோடும் வந்து பொருந்திய பொருளென்று சொல்லாநிற்கும் நபிகள் பெருமான் நபிமுகம்மது முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களின் பாதங்களாகிய இருதாமரை மலர்களின்மீதும் தனது தலையைக் கொண்டு தாழ்ந்துக் குற்றமற்ற கதீஜாநாயகி யவர்களை இரண்டு கைகளையும் குவியும்படி செய்து வணங்கி யாதொரு தீதுமில்லாது தானிருந்த இடத்தை விட்டு மெழுந்துத் தனது வீட்டை நோக்கி நடந்து சென்றான்.

---




**தட்டச்சு மற்றும் ஆக்கம்:**

**சு. அருண்குமார்** எம்.ஏ., எம்.பி.ஏ., பி.எட்., எம்ஃபில்., என்.இ.டி.,
**உதவி பேராசிரியர்**
**தமிழ் துறை.**